தூக்கிடப் போவதறிந்து அவளை இன்று போய்ப் பார்த்தோம்; அவள் உள்ளங் கலங்கி யிருந்தது. கொடிய இறப்பின் அச்சத்தால் அவளது நரம்பு நாடிகள் சில்லென்று குளிர்ந்திருந்தன. நாங்கள் அவளுக்கு ஆறுதல் கூறியும் அவள் மனம் அமைதி பெறவில்லை. பின்னர் பெரியாரொருவரை அழைத்துவந்து அவட்கு ஆறுதல் கூறினோம். அவ்விள மங்கையோடு ஆறுபேர் தூக்கிடப் படுமாறு கட்டளையிடப் பட்டிருந்தனர். அவர்களுள் ஒருவனுடைய மனைவியும் ஒரு குற்றவாளி. அவளுக்கு ஏழு குழந்தைகளிருந்ததுடன் அவள் அந்நேரத்தில் நிறைசூலியாகவு மிருந்தாள்! ஐயகோ! அவளைத் தூக்கிலிடப் போகுஞ் செய்தியை அறிந்த அவள் கணவன் திடீரென உள்ளங் கலங்கப் பெற்றுப் பித்தனைப் போல் அறிவு மயங்கிப் பக்கத்திலிருந்த சிறைக் காவலனை மிக வன்மையாகக் கடித்துவிட்டான்! கடியுண்ட காவலன் செந்நீர் ஒழுக வெளியே ஓடினான்.'' என அம்மையார் கூறுகிறார். நிறைசூலியைத் தூக்கிடலாகாதென்று அம்மையார் முயன்றதன் பயனாகக் குழந்தை பெற்று ஒரு திங்கள் கழித்து அவளைத் தூக்கிடுமாறு கட்டளையிடப்பட்டது. இத்தகைய கொடுங் காட்சிகளைக் கண்டபோது, அருளிரக்கமே ஒரு வடிவெடுத்தாற் போன்ற பிரை அம்மையாரின் மனம் அனலிடைப் பட்ட மெழுகுபோல் உருகுவதாயிற்று. சிறைப்பட்டவர்களின் குற்றத்திற்கேற்றவாறு அவர்களை ஒறுத்தல் வேண்டுமென்றும், அதற்கான சட்டம் அரசியலாராற் சிறைக்கூடங்களிற் கொண்டுவரப்படல் வேண்டுமென்றும் அம்மையார் பெரிதும் முயன்றார். [1]**ஹார்கோர்ட் பெருமாட்டி**, பிரை பெருமாட்டியின் கருத்திற் கிணங்கி அதிற் பேரூக்கங் கொண்

1. Lady Harcourt.

டனர். அவர் பிரை பெருமாட்டியாரை வற்புறுத்தி அழைத்துச் சென்று அரசகுடும்பத்தினரிடம் அறிமுகப் படுத்தினார். அரசரும் அரசியும் மற்றுமுள்ளாரும் அம்மை யாரைப் பேரன்புடன் வரவேற்றனர். ஆயினும், அம்மை யார்க்கு இச் சிறப்பெல்லாம் பெருமகிழ்வாகத் தோன்ற வில்லை. அவர் எண்ணமெல்லாம் தக்க காரணமில் லாமல் தூக்கிடப்படுங் கொடுமையை விலக்குவதிலேயே · · து கிடந்தது.

# 11. அம்மையாருக்கு வந்த பொருட்கேடு

அம்மையார் இவ்வாறு சிறைச்சாலைப் பணியில் ஈடுபட்டுப் பெரு நன்மைகள் செய்துகொண்டிருக்குங் காலத்தில் இங்கிலாந்து தேய முழுதிலும் பணநெருக்கடி உண்டாயிற்று. அதனால் தொழிலாளர்கள் வேலைநிறுத்தஞ் செய்தனர். அதுவுமன்றிச் சில கொடியோர் ஆங்காங்குத் தொழிற்சாலைகளிலுள்ள பொறிகளை (இயந்திரங்களை) உடைக்கவும் வைக்கோற் படைப்புகளுக்குத் தீயிடவும் தொடங்கினர். இந்நிலையில் அம்மையாரின் கணவனார் பங்காளியாயிருந்த பொருள் நிலயம், 1828-ஆம் ஆண்டில், முறிய நேர்ந்தது. இதனால் அம்மையார்க்குப் பொருட்கேடு மிகுதியாயேற்பட்டது. இஃது அவர் செய்துவரும் அறப் பணிக்கு இடையூறாயிருந்தது.

அம்மையார் குடும்பம் மிகப் பெரிதாதலால் அவர்க்கு இப்பொருட் கேடு துன்பந் தருவதாயிற்று. இதனையறிந்த அன்பர்கள் பலர் பல இடங்களிலிருந்தும் ஆறுதற் கடிதங்கள் எழுதினர். பொருள் முட்டுப்பாட்டால் அம்மையார் தம்மிடம் நீண்ட காலமாக வேலைபார்த்த வேலையாட்களையும் விலக்கவேண்டியவரானார். இன்னும், அவர் பாதுகாத்துவந்த அண்டை அயலிலுள்ள முதியோரையும் உதவியற்றோரையும் கைவிடவேண்டியவரானார்; தம் கைச்செலவில் நடத்திவந்த பள்ளிக்கூடங்களையும் நிறுத்த வேண்டியவரானார். பெருஞ் செல்வ வாழ்க்கையில் இருந்த அம்மையார் இத்துன்பநிலையில் ஞாயிற்றுக்கிழமையன்று கோயிலுக்குப் போகவேண்டுமா வேண்டாமாவென்று முதலில் மனந்தடுமாறினர். பின் ஒருவாறு மனந்தேறி, "ஆண்டவன் என் உயிரைப் போக்கினும்

நான் அவனை நம்புகிறேன்" என்று கூறிக் கோயிலுக்குச் சென்றனர் இவ்வாறு அம்மையார் இன்ப துன்பமென்னும் இருநிலைகளிலும் இறைவனை ஒரே நினைவாய்ப் பற்றி நின்றனர். குடும்பத்தில் துன்பப்படும் இவர்தம் உளநிலையைப் பற்றி இவர்தம் மகளார் ஒருவர் 'என் அருமை அன்னையாரது உளநிலை இன்ப துன்பங்களில் ஒரே தன்மையதாயிருக்கும்; எப்போதும் அவர் இனிய தோற்ற முடையவர்' என்று கூறுகின்றார். தமக்குப் பொருட்கேடு வந்தபின் அம்மையார் தம் அழகிய பெரிய வீட்டைவிட்டுத் தங் குடும்பத்தொடு தம் மகனது வீட்டுக்குச் சென்றனர். அன்றியும், அவர் தங்கணவரது வாணிகத் தொழிலை வயதுவந்த தம் ஆண்மக்கள் செய்யுமாறும் ஏற்பாடு செய்தனர். அம்மையாரின் உடன் பிறந்தாரான **சாமுவேல் கர்னி** என்பார் இக்காலத்தில் அவர்க்குப் பேருதவியா யிருந்ததுமன்றித் தாமிருந்துவந்த [1] **அப்டன் லேன்** என்னுந் தெருவிலுள்ள ஒரு வீட்டையுங் கொடுத்து உதவினர்.

## துன்பத்திலுஞ் சிறைப்பணி

அம்மையார் இத்துணைத் துன்பங்கட் கிடையிலும் தாம் ஆற்றிவந்த சிறைப்பணியை மறந்து விடவில்லை. அவர் நியூகேட் சிறைச்சாலையிற் செய்த சீர்திருத்தங்களின் பயனாக உலகெங்கணும் உள்ள சிறைச்சாலைகளில் பல நன்மைகள் விளைந்தன. இலண்டனிலுள்ள சிறைச்சாலைகளிலெல்லாம் மேற்பார்வையாளர்களும் ஆசிரியர்களும் பெண்பாலர்களாகவே ஏற்படுத்தப்பட்டனர். சிறைமாதர்களுக்குச் சமயக் கல்வியும், தொழிற் கல்வியும் கற்

1. Upton Lane

பிக்கப் பட்டன. குற்றவாளிகளின் குழந்தைகள் தனியே நல்ல முறையில் நடத்தப்பட்டனர். சிறைப் பெண்கள் ஒவ்வொருவரும் உயர்ந்த ஒழுக்கமும் சிறந்த நோக்கமும் உடையவர்களாய்ச் சீர்திருந்தலாயினர். அம்மையார் தாமிருந்த இடங்களிற் செய்த சிறைப்பணிமட்டும் போதாதென் றெண்ணினர். 1829-ஆம் ஆண்டில் பாராளுமன்றத்தில் உறுப்பினராயிருந்த தம் தங்கையின் கணவா [2]**சர் தாமஸ் பவல் பக்ஸ்டன்** என்பவரை வட இந்தியாவிற் சில இடங்களில் நடைபெற்ற உடன்கட்டையேறல் என்னுங் கொடிய வழக்கத்தை ஒழித்தற்கு ஒரு சட்டங் கொணரச் செய்தனர். அச் சட்டமும் அதே ஆண்டில் நிறைவேறியது.

## இலண்டன்மாநகர்க்கு வெளியேயும் கழகங்கள் நிறுவல்

இலண்டன்மா நகர்க்குப் புறம்பேயுள்ள பல நாடுநகரங்களையும் அம்மையார் பார்வையிட்டு, ஆங்காங்குத் தக்கார் பலரைக்கொண்டு [2] **பணியாளர் கழகங்கள்** நிறுவி, அக்கழகத்தினர் சிறைக்கூடங்களை முறையாகப் பார்வையிடச் செய்தனர். அயர்லாந்திலுள்ள [3] **டப்ளின், லண்டன் டெரி, லிஸ்பர்ன்** முதலிய பல ஊர்களையும் அம்மையார் போய்ப் பார்வையிட்டனர். அந் நாட்டு மக்கள் அம்மையாரிடம் மிகுந்த அன்பு காட்டினார்கள்.

அம்மையார ஐரோப்பாவிலுள்ள ஏனைய பகுதிகட்கு இதுவரை சென்றதில்லை. **ஜர்மனி, பிரான்ஸ், இத்தாலி, ருஷியா**

1. Sir Thomas Fowell Buxton 2. Association of Workers.
3. Dublin, Londondery, Lisburn.

முதலிய நாடுகளிலுள்ள சிறைச்சாலைத் தலைவர்கட்குச் சிறையின் சீர்திருத்தங்களைப் பற்றி அடிக்கடி அவர் கடிதங்கள் எழுதிவந்தார். இதன் பயனாக அப்பெரிய நகரங்களிலுள்ள சிறைக்கூடங்களி லெல்லாம் பலவகையான சீர்திருத்தங்கள் ஏறபடலாயின. அம்மையார் எழுதிக் கேட்டதற் கிணங்கி ஜர்மனியின் தலைநகரான **பெர்லின்** என்னும் ஊரிலுள்ள சிறைச்சாலையை மேற்பார்வையிட அவ்வூரவர் **மாதர் கழகம்** ஒன்று ஏறபடுத்தினர். அம்மையாரது எழுத்தின் பயனாக **டியூரின்** என்னும் ஊரில் சீர்திருந்த விரும்பும் சிறைமாதர்களுக்கென ஒரு **புகலிடம்** அமைக்கப்பட்டது.

## ருஷியாவின் சிறை

ருஷியாவிலுள்ள சிறைக்கூடங்கள் மிகவுஞ் சீர்கேடான நிலையிலிருந்தபடியால், அந்நாட்டினர் அம்மையாரை அங்கு வருமாறு கடிதவாயிலாய் வேண்டினர். அப்போது, அம்மையார் அங்குப் போக வாய்ப்பில்லா திருந்தனர். ஆகலான், அம்மையாரும் [1] **வால்ட்டர் வென்னிங்** என்பாரும், அவர் உடன்பிறந்தார் **ஜான்** என்பாரும் அந்நகரச் சிறைக்கூடத் தலைவர்களுக்குக் கடிதங்கள் எழுதலாயினர். இன்னும், பிரை பெருமாட்டியார் சிறைச்சாலைச் சீர்திருத்தங்களைப்பற்றி **ருஷியநாட்டரசி**யார்க்கு எழுதினார். அறிவும் இரக்கமுமுடைய அவ்வரசியார் அந்நாட்டிலிருக்கும் ஐந்து சிறைக்கூடங்களையும் மேற்பார்வையிட 'மாதர் கழகம்' ஒன்று ஏற்படுத்தி அதிலிருந்து அவைகட்குதவி செய்யுமாறு செய்தனர்; பின்னர் இம்மகிழ்ச்சியான செய்தியை வென்னிங் துரைமகனார்வாயிலாக பிரை பெருமாட்டியார்க்குத் தெரிவித்தார். அவ்வரசியார் வென்

1. Walter Venning

ணிங் துரைமகனார்க் கெழுதுகையில் 'பிரை அம்மையார் கூறும் புகழுரைகளுக்கு யான் தகுதியுடையவளல்லள்' என்றும், 'அம்மையார் ஏழை எளியவர்கள்பாலும், சிறை மாதர்களிடத்தும் காட்டிவரும் மெய்யன்புந் தன்னலமறுப் பும் எல்லாம் வல்ல ஆண்டவனாலேயே அவர்க்கு அளிக்கப் பட்டிருக்கின்றன' என்றுங் குறிப்பிடுகின்றார்.

இன்னும், [1] **நிக்கோலாஸ்** என்னும் அரசரும், அம்மை யாரின் அருட்பணியைத் தங் கருத்துட் கொண்டனர். ஒரு நாள் தம் ஆட்சிக்குட்பட்ட சிறைக்கூட மொன்றை அவர் பார்க்கச் சென்றனர். பார்த்துக்கொண்டு வரும்போது கடஞளிகளிருக்குஞ் சிறையில் நரைத்த மூன்று கிழவர் கள் முழந்தாளிட்டு அரசரை வணங்கி, 'எந்தையே! எம் கடுந்துயர் தீர்த்தருளு' மென்று வேண்டினர். அவ்வர சர் உடனே அவர்களை ஏதுங் கேளாமல் விடுதலை செய் தனர்.

இதுபோல், அம்மையார் கருத்துக்கிசைய **ஸ்விடன், ஹாலண்டு** முதலான பிறநாடுகளில் உள்ள சிறைக்கூடங் களிலும் சீர்திருத்த முயற்சிக ளெடுக்கப்பட்டன. அவ் விடங்களிற் பெண்கள் தம் முரண்பட்ட குணத்தாற் குற்றத்தை ஒப்புக்கொள்ளாமையினால், அவர்கள் தாங்கள் குற்றவாளிகள் என்று ஒப்புக்கொள்ளும்வரை அவர்களைச் சவுக்காலடிப்பது வழக்கமா யிருந்தது. பிரை பெருமாட்டி யாரது பெரு முயற்சியால் ஆங்காங்கு மேற்பார்வைக் கழ கங்கள் ஏற்பட்டதின்பின் இத்தகைய கொடிய ஒறுப்புக் கள் குறைந்துவந்தன. இன்னுமிவர், [2] '**நாட்டினர் பாதுகாப் புக் கழகம்** ஒன்று நிறுவி, அதன் வாயிலாகப் பணியாற்றக்

1. Nicholas 2. Nation Guardian Institution

கூடிய மாதர்களைப் பயிற்றுவித்து அவர்களை மேற்பார்வைத் தலைவியர்க்குத் துணைபுரியுமாறு சேர்த்துவைத்தனர். அதுவுமன்றி அப் பணிமாதர்கள் முதுமையடைந்தபோது அக்கழகத்திலிருந்து ஆண்டொன்றிற்குப் பதின்மூன்று பவுன் உதவிப் பணமாகக் கொடுத்து அவர்களைப் பாதுகாத்துவருமாறுஞ் செய்தனர். ஆகலான் இப்பணி செவ்விதின் நடைபெறுவதாயிறறு. இன்னுமிவர், பல நாடுகளுக்குச் செல்லும்போது ஆங்காங்குள்ள ஏழை எளியவர்களுடைய நிலைமைகளை உன்னித்து அவரவர்கட்கு வேண்டுவன செய்துவந்தார்.

# 12. நூல் நிலயங்கள் நிறுவல்

நாட்டிற் பல பகுதிகளிலுமுள்ள பல கழகக் கூட்டங் களுக்குஞ் செல்லுகையில், அம்மையார் கடற்கரைக் காவல் நிலயங்களிலுள்ள மக்கட்குக் கடற்கரை ஓரமாய் ஆங்காங் கிருக்குங் காவல்நிலயங்களின் அருகே நூல் நிலயங்கள் வைத்து அவர்கள் அறிவை விளங்கச் செய்யவேண்டு மென்று கருதினர்; அவ்வாறே, ஐந் நூறு நூல்நிலயங்கள் ஏற்படுத்தினர். அக்காலத்தில் நகரங்களுஞ் சிற்றூர்களுங் கடற்கரைக்கு மிகத் தொலைவில் இருந்தமையாற் கடற்கரை ஓரத்தில் வாழும் மக்கள் படிப்பதற்கு என ஐந்நூறு இடங் களில் நூல் நிலயங்கள் ஏற்படுத்தி அவற்றில் ஆண்பாலாரும் பெண்பாலாருங் குழந்தைகளுஞ் சேர்ந்து (26,000) இருபத் தாறுயிரம் பேர் படித்துக் கல்வியறிவு பெறுமாறு செய்த னர். இதற்காக அம்மையார் பொதுமக்களிடமிருந்து ஆயி ரம் பவுன் சேர்த்தனர். அவர், இதற்கு அரசியலாரையும் ஆயிரம் பவுன் தருமாறு வேண்டினர். ஆனல், அரசிய லார் முதலில் ஐந்நூறு பவுன் இதற்கென வழங்கி னர். சில நாட் சென்றதும் வேறு நானூறு பவுன் கொடுத்தார்கள். செல்வப் பெருமாட்டிகள் பலர் இதன் பொருட்டு அம்மையார்க்கு உதவிசெய்ய முன்வந்தனர். இவ்வாறு அம்மையார் அரசியலாரிடமிருந்தும் மற்றவர் களிடமிருந்தும் திரட்டிய பொருளைக் கொண்டு கடற்கரை யோரத்திலே யிருக்கிற ஏழை எளியவர்கட்கென 12,880 நூல்களடங்கிய எழுநூற்று எண்பது நூல் நிலயங்களையும், கப்பலிற் பயணஞ் செல்லுஞ் சிறையாளர்க்கென ஆயிரத்து எண்ணூற்று அறுபத்தேழு நூல்களடங் கிய 48 நூல் நிலயங்களையும் ஏற்படுத்தினர். இன்னும்

இவர் கப்பல்களிலுள்ள சிறுவர்கள் கல்வி பயிலும் பொருட்டு ஆறுயிரத்து நானூற்று அறுபத்து நான்கு பள்ளிக்கூடப் புத்தகங்கள் வாங்கி வைத்தனர். இன்னும் பல சிறு நூல்களும் சேர்த்து வைத்திருந்தனர். இவை யெல்லாஞ் சேர்ந்து மொத்தம் 52,464 நூல்களாகின்றன. 'கல்வியின் ஊங்கில்லை சிற் றுயிர்க்கு உற்ற துணை' என்றும், 'விலங்கொடு மக்களனையர் இலங்கு நூல் கற்றாரோடு ஏனையவர்' என்றும் கூறிய பெரியார் திருமொழிகட் கிணங்க, கல்வியறிவில்லாமற் காட்டு விலங்குகள்போல் அறியாமையிற் கட்டுண்டு கிடந்த ஆயிரக் கணக்கான மக்களுக்குக் கல்வியறிவாகிய புத்துயிரைக் கொடுத்தும், சிறைத் துன்பங்களைப் போக்கியும் பெருநலம் புரிந்த பிரை பெருமாட்டியாரது பெரும்புகழ் உலகமுழுவதும் பரவலாயிற்று. பரவவே, பல்வேறு நாடுநகரங்களிலிருந்து நன்றியறிதற் கடிதங்களும் வணக்கவுரைகளும் வந்தவண்ணமாகவே யிருந்தன. அம்மையார் சிறையிற் றுன்புறும் மக்களுக்கும், ஏழை எளியவர்கட்குஞ் செய்துவரும் இவ்வளவு நன்மையும் போதாதென்று **மருத்துவ மாதர் கழகம்** ஒன்றும் நிறுவ எண்ணினர்.

## மருத்துவ மாதர் கழகம் நிறுவல்

"ஏழை யெளியவர்கட்கு மருத்துவஞ் செய்யத்தக்க நல்ல பெண்கள் மருத்துவ மாதர்களாக வெளிவரல் வேண்டும்; மருத்துவ வேலைக்காகப பயிலுதற்கு ஒரு பயிற்சிக் கழகம் அமைததல் வேண்டும்" என்று அம்மையார் விரும்பினர். விரும்பியவாறு இவர் தம் இளவலின் மனைவி **திருமதி சாமுவேல் கர்னி** என்பாரைத் துணையாகக் கொண்டு, **பிஷப்ஸ் கேட்** என்னுமிடத்தில் முதன்முதல்

[1] **மருத்துவ மாதர் கழகம்** ஒன்று நிறுவினார். அதில் மாதர் பலரைச் சேர்த்து அவர்கட்கு மருத்துவப் பயிற்சியைக் கற்பித்துவந்தார். அம் மருத்துவ மாதர்கள் தூய்மையான வெண்ணிற ஆடையணிந்துகொள்ளுமாறு அம்மையார் ஏற்பாடு செய்திருந்தனர். பின், இப் பயிற்சிக் கழகத்தின் முழுப்பொறுப்பையும் பிரை பெருமாட்டியார் திருமதி சாமுவேல் கர்னியிடமே விட்டுவிட்டனர். மருத்துவப் பயிற்சியின் முன்னேற்றத்திற்காக [2] **விக்டோரியாப் பேரரசி யார்** வேண்டுமளவு உதவிசெய்தனர். மருத்துவ மாதர் ஒவ்வொருவரும் ஆண்டொன்றுக்கு இருபது பவுன் உதவிப் பணம் பெற்றுப் பெருமகிழ்வுடன் தம் வேலையைச் செய்து வந்தனர். இக்காலத்திற்றான், பிரை பெருமாட்டியாரின் கருத்திற் கிணங்கி, [3] **பிளாரன்ஸ் நைட்டிங்கேல் அம்மையார்** தம் இருபதாம் ஆண்டில் [4] **கிரிமியா**வில் நடந்த பெரும்போர்க்குச் செல்லும்போது பிரை பெருமாட்டியார் ஏற்படுத்திய மருத்துவ மாதர் பயிற்சிக் கழகத்தினின்றும் மருத்துவ மாதர்கள் சிலரைத் தமக்கு உதவிக்காக அழைத்துக் கொண்டு சென்றனர். சென்று, அவர் கருங்கடல் அருகேயுள்ள [5] **ஸ்குட்டாரி** மருத்துவச்சாலையில் கைகால் அறுபட்டுக் கிடந்த போர்மறவர்களுக்கு மருத்துவஞ் செய்யத் தலைப்பட்டுத் தம் வாழ்நாள் முழுதும் அவ்வருட்பணியிலேயே முனைந்து நின்றுபெரும் புகழ்பெறறார்.

ஆப்பிரிக்கா நாட்டில் வாழும் களங்கமிலாக் கருநிற ஏழைமக்களைப் பெருஞ் செல்வர்களும் வணிகர்களும் ஆடு மாடுகளைப் போல் விலைகொடுத்து வாங்கித் தமக்கு அடிமைப் படுத்திக் கொடுமை செய்துவந்தார்கள். அக்

1. First Nurse Home or Pioneer Institution for Nurses
2. Queen Victoria 3. Florence Nightingale 4. Crimea
5. Scutari

கொடிய செயலை ஒழிக்குமாறு அம்மையாரின் மைத்துன ரான சர். தாமஸ் பவல் பக்ஸ்டன் என்பார் பெருமுயற்சி செய்தனர். அப்போது அம்மையார் அவ் எளிய மக்களுந் தம்மவரைபோல் உரிமைவாழ்வு பெற்று வாழவேண்டு மென்று விரும்பி அவர்களது விடுதலைக்காக பக்ஸ்டனுரோடு சேர்ந்துழைக்க லாயினர். அடிமைகள் நன்மையின் பொருட் டுக் கூடிய மூவாயிரவர் அடங்கிய பெருங்கூட்டத்தில் அடி மைகளின் விடுதலையைக் குறித்து அம்மையார் மிக உருக்க மாகவும் விளக்கமாகவும் ஓர் அரிய விரிவுரை நிகழ்த்தினுர். இதன் பயனுகவும் சர். பக்ஸ்டன் என்பாரின் பெருமுயற்சி யினுலும், 1838-ஆம் ஆண்டு ஆகஸ்டுத் திங்கள் 28-ஆம் நாள், **அடிமை நீக்கச் சட்டம்** அரசியலாரால் நிறைவேற் றப்பட்டது.

அம்மையார் மேற்கொண்ட **சிறைப்பணி, மருத்துவ மாதர் பயிற்சிக் கழகம், நூல் நிலயங்கள் நிறுவல், அடிமை களின் விடுதலை** ஆகிய இவைகளெல்லாம் ஒருவாறு நிறை வேறலாயின. அம்மையார் அறப்பணிகளில் ஈடுபட்டுத் தம் பெரிய மக்களுடன் கவலையின்றி வாழுநாளில், அவர்தம் மக் கள் கிறித்துவைத் தொழும் முறைகள் அம்மையாரது கருத் துக்கு மாறுயிருந்தன. அவர் தாமுந் தம் மக்களும் ஒருங் கிருந்து கடவுளை வணங்கவேண்டுமென்று விரும்பினர். அதற்கு அவர்கள் இசையாதிருந்தமை அம்மையார்க்கு மிகவும் வருத்தத்தைத் தந்தது. ஆயினும், திங்கட் கொரு முறையாவது அனைவரும் ஒருங்கிருந்து விவிலிய நூலைப் படித்து ஆண்டவனை வணங்கவேண்டுமென்று அம்மை யார் தம் மக்கட்கு அறிவித்தனர். தம் தவப்பெரும் அன்னை யார் கருத்திற் கிசைந்து அவர்களும் அவ்வாறே ஒழுகி வருவாராயினர்.

# 13. பயணமும் பணியும்

அம்மையார் தமது ஐம்பத்தெட்டாம் ஆண்டில் பிரான்சு நாடு செல்லவிரும்பினர். அப்போது ஏராளமான நண்பர்கள் அவர் விருப்பத்திற்கிசைந்து பொருளுதவி புரிந்தார்கள். ஆகவே, இவர் 1838-ஆம் ஆண்டு ஜனவரித் திங்களில் தங் கணவனுருடனும், "நண்பர் கழக" உறுப்பினர் இருவருடனும் பிரான்சு தேயத்திற்குப் புறப்பட்டார். புறப்பட்டு [1] **போலோன்** என்னும் நகர்க்குச் சென்று சிறைச்சாலைகள், [2] மருத்துவ மாதர் கழகங்கள், [3] **கன்னிய ரிருப்பிடங்கள்** முதலியவைகளைப் பார்வையிட்டனர். அதன் பின், பாரிஸ் தலைநகரடைந்து [4] **ஹோட்டல் டி காஸ்டில்லே** என்னும் விடுதியிற் றங்கியிருந்தனர். அப்போது அரசியற் றூதுவரான [5] **கிரான்வில்** துரைமகனாரும் [6] **பார்க்லி பெருமாட்டியாரும்**, இன்னும் பெரியார் சிலரும் வந்து அம்மையாரைக் கண்டு அளவளாவி மகிழ்ந்தனர். ஞாயிற்றுக்கிழமை யன்று **பிரசென்சி** என்பார் நடாத்திவரும் பள்ளிக்கூடத்தைப் பார்வையிட்டனர். அம்மையார் வருகைக்காக அங்குள்ள இரு நூறு மாணவர்களும் பெரிதும் மகிழ்ந்தனர். மறுகிழமை **செயின்ட் லசாரே, லா போர்ஸ், ஜென்ஸ்டெட்னெஸ்** முதலிய ஊர்களிலுள்ள சிறைகளையும், படைஞர் சிறையினையும் அம்மையார் பார்வையிட்டனர். அச் சிறைகளைப் பார்வையிட்டு வரும்போது, சில வேளைகளில் அங்குள்ள சிறையாளர்களுக்கு விவிலிய நூலைப் படித்துக் காட்டி வருவர். இவ்வாறு, படித்துக் காட்டி வரும் நாளில், ஒருநாள் அவர்களிடம் தம் வருகையால் மகிழ்ச்சியுண்டா

---

1. Boulogne 2. Nurse Home 3. Nuns Home 4. Hotel De Castille 5 Granville 6. Duchess of Borglie.

வென்று அவர் கேட்டனர். அப்போது அச்சிறையாளர்கள் அக்கட்டிடம் முழுவதும் முழங்கும்படி 'உய்! உய்!!' அஃதாவது, ஆம்! ஆம்!! என்று பெருமகிழ்வுடன் கூவினர். பிரெஞ்சுமொழி அம்மையார்க்குப் பழக்கமில்லாததால அவர் விரிவுரைகள் பிரெஞ்சுமொழியில் மொழிபெயர்க்கப்பட்டுப் பெரிதும் பாராட்டப்பட்டன. அவ்விடங்களில் அம்மையாரைக் காணவந்தோர் பலர், அவரை விருந்தினராய் வருவித்து விருந்தருத்தினோர் பலர். பாரிஸ் நகரில் அவர் செய்த பணி மிகப் பெரிது.

பாரிஸிலிருந்து அம்மையார் தம் மக்கட்கு எழுதுங் கடிதத்தில் அங்கு நடந்த நிகழ்ச்சிகளைக் கீழ்வருமாறு குறிப்பிடுகின்றார்:—" இந் நகரத்திற்கு வந்தபோது முதலில் என் உடல்நிலை சிறிது தளர்வுற்றிருந்தது; பின் ஒருவாறு நலம் பெற்றதும் சிறைச்சாலைகளையும், மற்றைக் கழகங்களையும் பார்வையிட்டேன். தக்கார் பலரையுங் கண்டு மகிழும் பேறு பெற்றேன். சிறைச்சாலைகளிலுள்ள சிறையாளர்களின் குறைகளைப் பற்றியும், அவர்களிற பலர் இப்போதடைந்துள்ள வியத்தகு மாறுதல்களைப் பற்றியும் யான் பெரியார் பலருடன் பேசிக்கொண்டிருந்தேன். அவர்கள் அதனைக் கேட்டு மனம் நெகிழ்ப்பெற்றாராய்க் கண்ணீர் உகுத்தனர். நாடகங்களும் நடனங்களும சமயக் கோட்பாடுகளுக்கு மாறானவையென்று அரசியற் றாதுவரிடம் நான் கூறினேன். அங்கு உணவுகொள்ளும் வேளையில் அறிமுகப் படுத்தப்பட்ட நேயர்களே பெரும்பாலும் எனககுப் பயன்றரு நட்பினராயிருந்தனர். கல்வித்துறைத்தலைவரிடம் நான் நன்கு பழகிக்கொண்டேன். அவர் நான் அனுப்புகிற நூல்களைப் பிரெஞ்சு மொழியில் மொழிபெயர்த்து வெளியிடுவதாக ஒப்புக்கொண்டிருக்கின்றனர் ".

3121

## பிரான்சில் மாதர் கழகம் நிறுவல்

அம்மையார் பிரான்சிலுள்ள சிறைச்சாலைகளை மேற்பார்க்க மாதர் கழகம் ஒன்று நிறுவினார். அக்கழக மாதர்களை முதன்முதல் **செயின்ட் லசாரே**ச் சிறையின் மாதர் பகுதிக்கு அழைத்துச் சென்றனர். அவர்கள் முன்னிலையில் அச்சிறை மாதர்கட்கு அம்மையார் விவிலிய நூலைப் படித்துச் சில அறிவுரைகளையுங் கூறினார். உடனே அவற்றை மொழிபெயர்ப்பாளர்கள் பிரெஞ்சுமொழியில் மொழிபெயர்த்துக் கூறவே, அச்சிறைமாதர்கள் அவற்றைக் கேட்டு மனம் உருகிக் கண்ணீர் வடித்தனர். அம்மையார் வந்ததன் பயனாக, அங்கு அரிய நலன்கள் உண்டாகலாமென்று அக்கழக மாதர்கள் நம்பலாயினர்.

அம்மையார் பிரான்சு நாட்டரசரையும் அரசியையுங் கண்டார். "பிரான்சு நாட்டரசரையும் அரசியையும் நாங்கள் கண்டோம். அவர்கள் எங்களை மிக்க அன்புடன் வரவேற்றார்கள். அவர்கள் அத்துணை உயர்ந்த நிலையிலுள்ளவரேனும், இரக்கமுள்ள நெஞ்சினராகலான், எம் கருத்துக்களை அன்போடு ஏற்றுக் கொண்டனர். பின்னுஞ் சில நாட்கள் நாங்கள் அவர்களோடு தங்கியிருக்கவேண்டுமென்று விரும்பினார்கள். ஓரேயிடத்தில் காரணமில்லாமல் மிகுந்த நாள் நான் தங்குவதில்லை யாதலால் அவர்களிடம் விடை பெறறுக்கொண்டேன். பிரெஞ்சு மக்கள் மிகவும் அருமையானவர்கள்; அவர்களிடத்தில் துன்புறும் மக்களுக்கு உதவி செய்யும் நல்லெண்ணம் அமைந்திருக்கின்றது" என்று அம்மையார் தம்மக்கட்கு எழுதி யிருக்

3124



## பிரான்சிலிருந்து அம்மையார் தந்நாடு திரும்பல்

பிரான்சிலிருந்து அம்மையார் தந்நாடு திரும்பியதும் அவர் உடல்நலம் மிகவுங் குன்றியது. அம்மையார் ஆண்டிலும் முதிர்ந்து உடல்நலமுங் குன்றியதால் இவ்வுலக வாழ்வு நீங்கப்பெறுவரோ என்றஞ்சும் நிலையிலிருந்தனர். அப்போதுங்கூட அவர் "ஆண்டவன் என்னைக் கைவிடான் என்றும், இன்னும் அவனருளிய பணி செய்யக்கடவேன்" என்றுங் கூறுவாராயினர்.

அம்மையார் தம் முதுமைக் காலத்தில் வண்டிகளில வெளியூர் சென்று பணிசெய்து மேன்மேலுந் தம் உடலைக் கெடுத்துக் கொள்ளாமற் சில காலம் ஓய்வெடுத்துக்கொள்ளு மாறு அவர்தங் குடும்பத்தினர் அவரை மிகவும் வேண்டினர். அதற்கு, அம்மையார், "தாம் இறக்கு மளவும ஆண்டவனருளிய அறப் பணியைச் செய்யக் கடவேன்" என்று ஊக்கமுடன் கூறினார். இவ்வாறு அம்மையார் அடுத்தடுத்து மொழிவதாலேயே அவர் "என் கடன் பணி செய்து கிடப்பதே" என்ற பெரியார் திருமொழிக்கு இலக்காயிருந்தமை நன்கு புலனாகின்றது.

## ஸ்காத்லாந்துக்குச் செல்லல்

ஸ்காத்லாந்து நாட்டிலுள்ள சிறைச்சாலைகளைச் சீர் திருத்தும்பொருட்டுப் பாராளுமன்றத்தில் ஒரு சட்டம் கொண்டு வரப்பட்டது. அது நிறைவேறுவதற்கு அம்மையார் ஒத்துழைக்க விரும்பி ஸ்காத்லாந்துக்குச் சென்றார். அங்குள்ள சிறைகளைப் பார்வையிட்டுச் சிறைத்தலைவர்களிடம் அவைகளின் சீர்திருத்தங்களைப்பற்றிப் பேசினார். அங்குள்ள சிறைகளிற் பல சீர்திருத்தங்கள் செய்வதற்குப்

பல முயற்சிக ளெடுக்கப்பட்டு அவை நிறைவேறின. அவ்வாறே பிரை அம்மையாரின் உயர்ந்த நோக்கங்கள் ஆங்கில நாட்டிலும், பிற நாடுகளிலும் இனிது நிறைவேறலாயின. பின்னர் அம்மையார், [1]**அபர்டீனுக்கு** வந்தனர். அங்கே சிறைக்கூடங்களை நல்ல முறையிற் கட்டுவதிலும், சிறையாளர்களுக்கு உணவு கொடுப்பதிலும சிறந்த ஏற்பாடுகள் செய்யப்பட்டிருந்தமை கண்டு மகிழ்ந்தார். இன்னும், அங்கே நீண்ட காலத் தீர்ப்புப் பெற்றுக் களைப்படைந்த குற்றவாளிகளை இப்போது நல்ல முறையில் நடத்துவதையும், அவர்கட்குக் கல்வி கற்பிப்பதிற் கருத்துச் செலுத்தப்படுவதையும், அவர்கட்குக் கைத்தொழில்கள் கற்றுக்கொடுக்கப்படுவதுடன் அக் கைத்தொழிலிற் பெற்ற ஊதியத்தை விடுதலையானவுடன் அவர்களிடமே கொடுத்து விடுவதையும் அவர் கண்டார். **எடின்பரோ, கிளாஸ்கோ** என்னும் நகரங்களில் அம்மையார் நிகழ்த்திய சொற்பொழிவுகளைக் கேட்கவந்த மாபெருங் கூட்டத்திற்கு இடம் போதாதாயிற்று. அக்காலங்களில், அம்மையார் நிகழ்த்திய சிறைச சீர்திருத்த விரிவுரையின் சிறந்த குறிப்புக்களும் அவைகளைப் பற்றிய பாராட்டுரைகளும் எல்லாச் செய்தித் தாள்களிலும் தெளிவாய் வெளியிடப்பட்டன.

## அம்மையார் மறுமுறை பிரான்சுக்குச் செல்லல்

அக் காலத்தில் மற்ற நாடுகளுக்குப் பயணம் போவது மிகவும் கடுமையாயிருந்தது. [2]**புகைவண்டி**, [3]**உந்து வண்டி** போன்றவைகள் அக் காலத்தில் கிடையா. நெடும் பயணமாளுலும் குதிரை வண்டிகளிற்றான் எவருஞ் செல்லல் வேண்டும். இடைவழிகளிற் றங்குவதற்கு இசைவான

1 Aberdeen 2. Train 3. Motor Car



அம்மையார் பிள்ளைகளில் எழுவர்

[பக்கம் 81

இடங்கள் அமைக்கப்படவில்லை. இந் நிலையில் அம்மையார் தம் முதுமைக் காலத்தில் திரும்பவும் பிரான்சுக்குப் பயணம் புறப்பட்டமை பெரியதொரு வியப்பன்றோ! அம்மையார் தங் கணவனுருடனும் புதல்வியர் சிலரொடும் 1839-ஆம் ஆண்டு டிசம்பர்த் திங்களில் பிரான்சு நாடு சென்றனர். அஞ்ஞான்று, இவர்தம் பதின்மூன்று பேரப்பிள்ளைகளும், [1]பதினொரு பிள்ளைகளும், ஏனையோரும் இவரை வழியனுப்பினர். முதலில், **அபெவில்லே** என்னும் ஊர்க்குச் சென்றனர். அங்குள்ளார் அம்மையாரை விவிலிய நூலைப் படிக்குமாறு வேண்டினர். அதற்கிசைந்து அவர் அந்நூலை மிக உருக்கமாகப் படிக்க, அது கேட்டு அவர்கள் மகிழ்ந்தனர்.

பின்னர் பாரிஸிலிருந்து **போர்தன்பிளோ, லயான்ஸ், நீஸ்மே** முதலிய இடங்களிலுள்ள சிறைக்கூடங்களை அம்மையார் பார்வையிடச் சென்றனர். இச் சிறைகளிலுள்ள குற்றவாளிகள் மிகக் கொடியவர்கள். ஆகலான், அம்மையார் அங்குப் போர்மறவர்கள் துணையுடன் சென்று பார்வையிட ஏற்பாடு செய்யப்பட்டது. ஆனால், அம்மையாரையும் அவரொடு வந்தவர்களையுங் கண்டவுடன் அங்குள்ள குற்றவாளிகள் தம் முரட்டுத்தனம் ஒடுங்கப் பெற்று ஒருவாறு அமைதியாயிருந்தனர். குற்றவாளிகளிற் சிலர் இருப்புச் சங்கிலிகளால் இறுகப் பிணிக்கப்பட்டுச் சிறிதும் அசையமுடியாமல் வைக்கப்பட்டிருந்தனர். இக் கொடுங் காட்சியைக் கண்ட அம்மையார் மிக வருந்தி, சங்கிலிகளை அவிழ்த்துச் சுமைகளைக் குறைக்குமாறு அச்

1. (1) Katherine (1801) (2) Rachel (1803) (3) John Gurney (1804) (4) William Storrs (1806) (5) Richenda (1808) (6) Joseph (1809) (7) Elizabeth (1811-1815) (8) Hannah (1812) (9) Louisa (1814) (10) Samuel Gurney (1816) (11) Daniel Gurney (1822).

சிறைச்சாலைத் தலைவர்களை வேண்டினர். அவர்களும் அம்மையார் வேண்டுகோளின்படியே செய்தனர்.

1840-ஆம் ஆண்டில், மூன்றும் முறையாக ஐரோப்பாவிலுள்ள **பெல்ஜியம், ஜெர்மனி, ஹாலந்து** ஆகிய நாடுகளுக்குத் தம் தம்பி சாமுவேல், அவர்தம் மனைவி மக்கள், நண்பரொருவர் ஆகியோருடன் அம்மையார் புறப்பட்டனர். அவர் **ஆஸ்டெண்டி**லிருந்தகாலை, பெல்ஜிய அரசவையிலிருந்து அவர்க்கு அழைப்பு வந்தது. அங்குள்ள ஆங்கிலக் கன்னியர் மடத்தில் பெண்களை மணமின்றிப் பெருங் கட்டுப்பாடுகளுடன் ஓரிடத்தில் வைத்திருப்பதால் நேரிடுந் தீங்குகளைப் பற்றி அம்மையார் அவர்கட்கு நன்கெடுத்துக் கூறினர். இன்னும் [1]**ஆம்ஸ்டர்டாம்**, [2]**ராட்டர்டாம்** என்னும் நகரங்களுக்குப் போய்ச் சிறைச்சாலைகளைப் பார்வையிட்டனர். சிறையாளர்களில் குற்றஞ் செய்தவர்களும், குற்றஞ் செய்யாதவர்களும் தங்கள் குற்றங்களை ஒப்புக்கொள்ளும்வரை இருப்புச் சங்கிலிகளால் தரையொடு பிணிக்கப்பட்டிருப்பதை அம்மையார் அங்குக் கண்டனர். கண்டு மனம் வருந்தி, அக்கொடுமையை விலக்குமாறு அவர் கேட்டுக்கொண்டதற் கிணங்கி, அச்சிறைத் 'வர்கள் அதனை நிறுத்திவிட்டார்கள்.

## டென்மார்க்கிற்குச் செல்லல்

1841-ஆம் ஆண்டு அம்மையார் டென்மார்க்கிற்குச் சென்று, அங்குள்ள சிறைகளைப் பார்வையிட்டுப் பல சீர்திருத்தங்கள் செய்தனர். இத்தகைய பேருழைப்பாலும், நெடும் பயணத்தாலும், ஆண்டின் முதிர்ச்சியாலும் அவர் உடல்நலங்குன்றி மிகவுந் தளர்வுற்றுத் தம் ஊர் திரும்பினர்.

1. Amsterdam 2. Rotterdam

## பயணங்களுந் துன்பங்களும்

1843-ஆம் ஆண்டில், தம் அறுபத்து மூன்றும் அகவையில், அம்மையார் தம் மூத்த புதல்வி, தம் தம்பி யார் ஜோசப் ஜான், அவர்தம் மனைவி ஆகிய இவர்களுடன் கடைசி முறையாக ஐரோப்பாவிலுள்ள பல நாடுகளுக்கு மீண்டும் பயணமாகப் புறப்பட்டார். புறப்பட்டு, **போலோன்** என்னும் நகருக்குப் போவதற்குள் கடல் கொந்தளிப்புற்றது; குளிர்காற்று மிகுந்தது. அதனால் அம்மையார் உடல்நலங் கெட்டது. இதுகண்ட புதல்வி யாரும், உடன்பிறந்தாரும் அவரைத் தம்நாடு திரும்புமாறு வேண்டினர். அதற்கவர், 'எடுத்த காரியத்நிற் பின்னிடைத லாகாது' என்று கூறி, இடையிலுள்ள ஓர் ஊரில் ஒருநாள் ஓய்வெடுத்துக் கொண்டனர். ஆண்டவனருளால் அவர் உட லுஞ் சிறிது நலம் பெற்றது. உடனே அவர் போலோன் சென்றனர். அந்நகரில் உலகெங்கும் புகழ்பெற்ற வானளா விய கிறித்தவக் கோயில் ஒன்றுண்டு. அதனருகே கடவுளை உருவமின்றி வழிபடும் கிறித்தவக் குரு ஒருவரிருக்கும் பெரிய இடத்தில், உரோமன் கத்தோலிக்கர் பலர் முன்னிலை யில் அம்மையார் ஆண்டவனைத் தொழுது அவனுடைய பெருமைகளைப்பற்றி மிக விரிவாகப் பேசினர். இதனைக் கேட்டோரனைவரும் இறைவனது உண்மையை யுணர்ந்து அம்மையாரைப் பெரிதும் பாராட்டினர்.

**கிளெர்மான்றனுய்ஸ்** என்னும் பிறிதோரிடத்திலுள்ள பெரிய சிறையை அம்மையார் பார்வையிடச் சென்றனர். அச் சிறைச்சாலையை ஒரு தலைவியும் இருபத்திரண்டு கன்னி யர்களுமாக மேற்பார்த்து வந்தார்கள். அக்கன்னியர்களின் முயற்சியால் சிறையாளர்கள் வேலைசெய்து கொண்டும், இசைபாடிக் கொண்டுந் திருத்தமான நிலையிலிருப்பதைக்

கண்டு அம்மையார் பெரிதும் மகிழ்ந்தனர்; பின்னர், அக்கன்னியர்களுடன் தனியே பேச விரும்புவதாக அவர்கட்குத் தெரிவித்தார். அதற்கவர்கள் சிறிது தயங்கிப் பின் ஒப்புக்கொண்டனர். அம்மையார் அவர்களிடம் நியூகேட்டில் தாம் செய்திருக்கிற சீர்திருத்தங்களைக் கூறினார். அது கேட்டு அவர்கள், அம்மையார் செய்திருக்கிற அரிய பெரிய வேலைகளைப் பாராட்டினர். இன்னும், அக் கன்னியர்கள் அச் சிறையில் மிகுதியான திருத்தங்கள் செய்ய வேண்டுமென்றும், செய்யும்போது கடவுட்பற்றுடன் தற்பெருமையின்றிச் செய்ய வேண்டுமென்றும் அம்மையார் அவர்கட்கு விளங்கவுரைத்தனர். அக்கன்னியர்களும் அவர்தந் தலைவியரும் அம்மையார் கூறிய அறிவுரைகளைக் கேட்டு மிகப் போற்றினர்.

அம்மையார் பின்னுஞ் சில இடங்களுக்குப் போய் ஆங்காங்கு வேண்டுஞ் சீர்திருத்தங்களைச் செய்தனர். இன்னும் அவர் நீண்ட பயணஞ் செய்வதற்கிடனின்றி உடல்நிலை கெட்டுவிட்டது. ஆகையால், அவர் விரைவில் நாடு திரும்ப வேண்டியவரானார்.

## 14. அரசியார் பாராட்டும் அம்மையார் முடிவும்

ஒருகால், ஜர்மனி நாட்டரசர் **நான்காம் பிரெடரிக் உவில்லியம்** இலண்டன்மா நகரில் நடந்த ஒரு சிறப் பிற்கு வந்திருந்தனர். அப்போது அவ்வரசர் அச்சிறப்புக் கூட்டத்தில் பிரை அம்மையாரைக் கண்டு பழமைபோல் மிக அன்பாகப் பேசினர். இதுவுமல்லாமல், அவர், தாமே அம்மையார் வீட்டிற்குச் சென்று அவரோடிருந்து விருந் துண்டு அவரைப் பெருமைப்படுத்தினர். சிறைப்பட்டவர் கள் நலத்தின்பொருட்டு பிரை பெருமாட்டியார் முன்னே ஜர்மனி நாட்டிற்கு வந்திருந்ததனை அவ்வரசர் பெருமான் மறந்துவிடவில்லை. அம்மையாரது அறப்பணியை எந்நேர மும் அவர் நினைந்து பாராட்டு மியல்பினர். சிறைச்சாலை களிலும் பித்தர் விடுதிகளிலும் வேண்டிய சீர்திருத்தங்கள் செய்ய வேண்டுமென்று பெரும்பாடுபட்ட மாதரா ராகிய பிரை அம்மையாரை அவர் வீட்டிலே போய்ப் பார்ப்பது முறையே என்று அவ் அரசர்பெருமான் எண்ணினது வாய்வதேயாம்.

இந்தியாவின் தனிப்பேரரசியாகிய **விக்டோரியாப் பெரு மாட்டிக்கு** மணமான சிலநாட்களில், அவ்வரசியார் பிரை அம்மையார் செய்துவந்த அளவிலா நன்மைகளில் ஒன்றா கிய துணையற்ற பெண்களுக்கு உதவிசெய்யும் அறப்பணிக் காக ஐம்பது பவுன் கொடுத்துதவி அவரைத் தம்பால் வரவழைததனர்.

பின், விக்டோரியா அரசியார் தம் அரண்மனையில் சிறந்த விருந்தொன்று நடத்தினர். அவ்விருந்தில் பிரை அம்மையார் மிக்க அன்பொடு வரவேற்கப்பட்டார். விக்

டோரியா அரசியாரின் கணவர் பெருமானான ஆல்பர்ட் அரசரின் அருகிலிருந்து அம்மையார் விருந்தயின்றனர். அன்று அம்மையார் அரசர் பெருமானோடும், அமைச்சரான **சர். இராபர்ட் பீல்** என்னும் துரைமகனாரோடும் தாம் நெடு நேரம் உரையாடிக் கொண்டிருந்ததைப்பற்றிப் பின்வருமாறு குறிப்பிடுகின்றார்: "கிறித்தவர்கள் தங்கள் மக்களுக்கு வேண்டிய அளவு சமயக்கல்வி கற்பியா திருப்பதையும், அவர்கள் கடவுள்நெறியைப் பின்பற்றி ஒழுகுவதன் பெருமையையும் அறியாம லிருக்கின்றனர். இதுகாறும் நான் சுற்றிப்பார்த்த அளவில் மக்கள் திருந்துவதற்குக் காரணமாயிருப்பது கடவுட்பற்றைத் தவிரப் பிறிதொன்றில்லையென்பது பற்றியும், என் சுற்றுப் பயணங்களைப்பற்றியும், சிறைச்சாலைகளின் நிலைமைகளைக் குறித்தும், ஐரோப்பா இப்போதிருக்கும் நிலைமையினையும், ஆங்காங்கே மக்கள் வாழ்க்கை நடாத்தும் முறைகளையும், அவர்கள் நடையுடைகளின் போக்கினையும் விளக்கமாகப் பேசிக்கொண்டிருந்தோம்."

## அம்மையாரது முடிவு

அம்மையார் தம் மக்கள் பதினொருவரையும் வளர்ப்பதில் அல்லற்பட்டும், நாடு நகரங்கள்தோறும், அடுத்தடுத்துப் பன்முறை நெடும்பயணஞ் சென்று சிறைச்சாலைகளின் சீர்திருத்தத்திற்காகப் பேருழைப் பெடுத்தும், அதுபற்றி ஆங்காங்கே அரிய பெரிய சொற்பொழிவுகள் நிகழ்த்தியும் வந்தமையால் அம்மையாரது உடல்நிலை மிகவுந் தளர்வுற்றது. இப்போது அம்மையார் மிகுதியாக நடக்க முடியாத நிலையிலிருந்தனர். ஆதலால், இருந்தவிடத்திலிருந்தே இவர் தம்மாலான எழுத்து வேலைகளைமட்டுஞ் செய்துகொண்டிருந்தனர். அம்மையார் பல்லாண்டு செய்த பெருமுயற்சி

களின் பயனாக பாட்டனிபேச் சிறைக்கப்பலிற் செல்லும் சிறைமாதர்களை மேற்பார்த்து அவர்கட்கு வேண்டுவன செய்யுமாறு அரசியலார் மாதர் இருவரை அனுப்பலாயி னர். அவர்களில் ஒருவர்க்கு பிரை பெருமாட்டியார் கீழ் வருமாறு வரைகின்றார்:

" மக்களிடையே இன்னுஞ் சிறந்த பணி செய்யவேண் டிய இக்காலத்தில் யான் உடல் வன்மையில்லா திருக்கின் றேன். இப்போது உங்களைப்போற் சிறையாளர்க ளிடையே மேற்பார்வையாளராக அமர்ந்து உழைக்கும் பேறு யான் பெறுவிடினும், என் நண்பராகிய நீங்கள் அதனை மிக அன்போடு ஏற்றுப் பணிசெய்ய முன்வந்த மைக்குப் பெரிதும் மகிழ்கின்றேன். குற்றவாளிகளான அம் மாதர்களனைவரும் பாம்பைப்போல் நுண்ணிய அறி வும், புறாவைப்போல் கள்ளமற்ற உள்ளமும், இரக்கமும் உடையவர்களா யிருக்க வேண்டுமென்பதை உங்கட்கு நினைவூட்டுகின்றேன்."

இம் முதுமைக் காலத்தில், அம்மையார் குடும்பத்தில் இறபபுத் துன்பங்களும் நேர்ந்தன. "கூற்றுவனுலகை அணுகும் எனக்கும் இறந்தோரைப்பற்றிய துன்பம் பொறுக்க முடியவில்லை" என்று அம்மையார் ஒருமுறை கூறினர். இவர் ஞாயிறுதோறுங் கோயிலுக்குப் போய் வருவது வழக்கம். ஆனால், இப்போது உடல்நிலை மிகத் தளர்வுற்றதால், தாமே உடையுடுத்துக் கோயிலுக்குப் புறப் படுவது அவர்க்குப் பெருந்தொல்லையா யிருந்தது. எனினும், ஒருமுறை மறுஞாயிறன்று எவ்வாறாயினுங் கோயிலுக்குப் போகவேண்டுமென்று பேராவல் கொண்டனர். இஃதறிந்த அம்மையாரின் புதல்வரொருவர் அன்புமிக்க தம் அன்னை யார் விருப்பத்தை நிறைவேற்ற அவரைக் கோயிலுக்கு நாற்

காலியில் வைத்துத் தூக்கிச் செல்வதே முறையென்றெண்ணி னர். அவ்வாறே அப் புதல்வர் அம்மையாரை அழைத்துச் சென்றனர். அம்மையார் தந் தளர்ந்த நிலையினைப் பொருட் படுத்தாமல் அங்கே ஆண்டவனைப்பற்றிச் சிறிதுநேரம் மிகத் தெளிவாக எல்லாரும் வியக்கத்தக்க நிலையில் பேசி னர். பின்னர் அங்கிருந்து வீடு திரும்பினர். அதுமுதல் அம்மையாரின் உடல்நிலை நாளுக்குநாள் தளர்ச்சி யடைந்தே வந்தது. ஒருநாள் அம்மையார் தம் படுக்கைக்குச் செல்லும் போது மிகுந்த களைப்பினால் திடுமெனச் சுவரிற் சாய்ந்தனர். உடனே அவர் மக்களனைவரும் ஓடிவந்து அம்மையாரைத் தூக்கிப் படுக்கையில் அமர்த்தினர்; பின் அயர்வு சிறிது நீங்கித் தெளிந்ததும், தம் அருகிருந்த மக்களை நோக்கி மெலிந்த குரலில், "நான் பதினேழாண்டினளாயிருந்த போதே கடவுள் திருவுள்ளத்துக்கு எது பொருத்தமா னதோ அதையே நான் செய்யவேண்டுமென்று என் மன தில் ஒரு தோற்றமுண்டாயிற்று. ஆதலால், அதுமுதல் அல்லும் பகலும், கனவிலும் நனவிலும், நோயிலும் நலத் திலும், எப்பொழுதும் ஆண்டவனருளே குறியாக நான் கொண்ட அத் தோற்றம் என் நெஞ்சை விட்டு ஒரு நொடிப் பொழுதேனும் நீங்கினதே யில்லை. '**அன்பே கடவுள்**' ஆதலின் நீங்க ளெல்லாரும் கடவுட்பற்றுடன் ஒருவர்க் கொருவர் அன்பாயிருக்கக்கடவீர்கள்" என்று மொழிந் தனர்.

இதன்பின் அம்மையார், 1845-ஆம் ஆண்டு அக்டோ பர்த் திங்கள் 13-ஆம் நாள் இரவு ஒன்பது மணிக்கு, இப்பருவுடல் நீத்துப் புகழுடம்பு எய்தினர்.

# 15. அம்மையாரின் அருங்குணங்கள்

(1) பதினொரு குழந்தைகளைப் பெற்ற ஒரு தாய் உலகப் பொதுப்பணியில் ஈடுபட்டு இத்துணைப் பெரிய காரியத்தை எவ்வாறு செய்தார் என்று வியப்படையும் நிலையில் எலிசபெத் அம்மையாரது வாழ்க்கை அமைவதாயிற்று. இவ் அம்மையார் தம் இல்லற வாழ்க்கையைக் குறைவின்றி இனிது நடாத்திவந்தனரென்பதை இவரது நாட் குறிப்பினின்றும் பல எடுத்துக்காட்டுகளால் அறிகின்றோம். ஆண்பாலாருங் கூடச் செய்து முடிக்க இயலாதிருந்த அரியதொரு சிறைப்பணியை அம்மையார் தாம் ஒருவராகவே முயன்று இனிது முடித்துப் பெரும்புகழ் பெற்றாரென்பது இவரது வரலாற்றால் நன்கு விளங்கும்.

(2) அம்மையாரிடமுள்ள சிறந்த பல குணங்களுள் முதன்மையானவை நடுநிலைமையும், உலகநடையினை அறிந்து செய்தலாகிய ஒப்புரவுமேயாம்.

(3) இவர், தம்முடைய பதினேழாம் ஆண்டிலேயே **சேவரிப் பெரியாரின்** சிறந்த விரிவுரைகளைக் கேட்டதிலிருந்து, பட்டாடைக ளணிந்துவந்ததையும், வேடிக்கை விளையாட்டுக்கள் பார்த்துவந்ததையும் அறவே வெறுத்துக் கவர்ச்சியற்ற தூய வெண்ணிற ஆடையணிந்து ஆண்டவனருளிய மக்கட்பணியைச் செய்ய முன்வந்தனர். ஆனால், இவர்தம் உடன்பிறந்தார்கள், இவர் நிலக்கரி வாரும் கூடைபோன்ற அழகற்ற குவேக்கர் தொப்பியை அணிந்திருப்பது கண்டு, மிக வருந்தினார்கள். அம்மையார் முன்போலவே சிறந்த ஆடைகளை அணிந்துகொண்டே ஏழைமக்கட்குப் பணி செய்தலாகாதோ வெனின், ஆர

வாரமான அழகிய பட்டாடைகள் அணிந்து அவைகளில்லா ஏழை எளியவர்களிடஞ் சென்று பணிபுரிவது முறையாகா தென்பதை இவர் உணர்ந்தார். இவ் அரிய தெய்வ வுணர்ச்சி அத்தகைய இளமகளிர்க்கு வாய்த்தல் அரிதினும் அரிதன்றோ? **விக்டோரியாப் பேரரசியாரும்** தாம் முடி சூட்டப் பெற்றவுடன், தம்மை உலகத்தவர் காணும் பொருட்டு எடுக்கப்படுந் தம் [1]**நிழலுரு** ஏழை எளியவர்கள் பார்க்கத்தக்க எளிய நிலையில் அமைந்திருக்க வேண்டு மென்று விரும்பினர். விரும்பியவாறே அரசியார் எளிய வுடையில் அந் நிழலுருவிற்கு அமரலாயினர்.

(4) செல்வ நிலையில் வாழும் மாதர்களிற் பெரும்பாலார் சில குழந்தைகளே உடையராயினும் அக்குழந்தைகள் தொல்லையால் ஏதுஞ் செய்ய முடியவில்லை யென்றும், நேரங் கிடைப்பதில்லை யென்றுங் கூறி வாளாவிருந்து காலங் கழிக்கின்றனர். ஆனால், எலிசபெத் அம்மையாரோ ஒன்பது குழந்தைகளை வைத்துக்கொண்டு, அவர்களையுந் தம் அருமைக் கணவனையுங் கருத்துடன் அன்பாகப் பார்த்து வந்ததோடமையாமல், தாமிருந்த **பிளாஷெட்டில்** ஒரு **பள்ளிக்கூடமும் மருத்துவச்சாலையும்** வைத்து நடாத்தி வந்தமை பெரிதும் பாராட்டத்தக்க தன்றோ?

(5) இவர் அண்டை அயலாரிடமும் அவர்தம் மக்களிடமும் மிகுந்த அன்புகாட்டும் இயல்பினர். இவருடைய இனிய குரலும் இன்சொல்லும் பிள்ளைகள் எல்லோர் மனதையும் பெரிதுங் கவர்ந்தன. பிள்ளைகளை நன்றாய் வளர்க்கத் தெரியாத அக்காலத்தில், குழந்தைகளைக் கருத்தாய் வளர்க்கும் முறைகளை அவர்தம் தாய்மார்களுக்கு இவர் நன்கெடுத்துக் கூறிவந்தனர்.

---

1. Photograph.

(6) அம்மையார் செல்வக் குடியிற் பிறந்து, செல்வக் குடியில் வாழ்க்கைப்பட்டனராயினும், ஆரவாரமான வாழ்வை இவர் என்றும் விரும்பவில்லை. ஆகலான், துன்பம் வந்த காலத்தும் இவர் அயர்வுகொள்ளாது மன நிறைவுடையரா யிருந்தனர். இவர்தங் கணவனார் பங் காளியாயிருந்த பொருள்நிலயம் முறிந்து அம்மையாருக் குப் பொருட்கேடு ஏற்படலாயிற்று. அப்போது தாமிருந்த பெரியதொரு இல்லத்தை விட்டுத் தம் மகனார்து சிறிய வீட் டில் தம் பெருங் குடும்பத்துடன் இவர் இருக்க வேண்டிய வரானார். அப்போது, ஆண்டவனருளாற் றமக்குக் கிடைத்த இச்சிறு இல்லமே போதுமானது என்று இவர் கூறிச், 'செல்வமென்பது சிந்தையின் நிறைவே' என்று **குமரகுருபர அடிகள்** அருளிய திருமொழிக் கிணங்க மன அமைதி பெற்றனர்.

தமக்கு வந்த பொருட்கேட்டினால் இவர், மனத்தளர் வடையவில்லை; தம் வாழ்க்கையின் குறிக்கோளான சிறைப்பணியை இவர் ஒருசிறிதும் மறந்துவிடவில்லை. ஏழை எளியவர்கட்கும் சிறையாளர்கட்கும் பெரும்பணி செய்துவரும் தமக்கு இத்தகைய துன்பம் நேரல் தகுமோ என்று கருதி இவர் இறைவனை நொந்துகொண்டாரல்லர். மக்களியற்கையோ நல்லதொன்றைச் செய்யுங்கால் இடர் வரின் மனமுடைந்து ஆண்டவனைப் பழித்துப்பேசித் தாம் செய்து வந்ததனைக் கூடச் செய்யாது விடுவதேயாம். இவ் அம்மையாரோ துன்பநிலையைப் பொருட்படுத்தாது அக் காலத்தில் ஜர்மனி பிரான்சு முதலிய வெளிநாடுகளுக்குப் பலமுறை சென்று ஆங்காங்கேயுள்ள சிறையாளர்கட்குப் பெருநன்மைகள் செய்துவந்துள்ளனர். இன்பத்திலும் துன்பத்திலும் ஒரே தன்மைத்தான உளநிலை மக்க ளெல்

லார்பாலும் அமைவதருமை. ஆனால், இவ் ஒப்பற்ற இயற்கை அம்மையார்க்கு அமைந்திருந்ததை நாம் காண்கின்றோம்.

(7) ஐரோப்பா முதலிய நாடுகளுக்குப் பயணம் போகும்போதெல்லாம் தம் கணவர், மக்கள், உடன்பிறந்தார், நண்பர்கள் ஆகிய இவர்களிற் சிலரை அம்மையார் தம்முடன் அழைத்துச் செல்வது வழக்கம். இவர் அவ்வாறு அழைத்துச் சென்றதன் நோக்கந்தான் யாதோவெனின், தம்மொடு வருபவர்களும் தாம் போகுமிடங்களிலுள்ள மக்கள் நிலைகளையும், அங்கங்கே சிறையாளர்கள் படுந் துயர்களையுங் கண்டுணர்ந்து பணிசெய்ய முன்வருதல் வேண்டுமென்பதேயாம்.

(8) தம்மைப்போல் மாதர்கள் எல்லோரும் பொதுப் பணி யாற்றவேண்டு மென்பது இவர் நோக்கமன்று. ஏனெனின், அத்தகைய பணி எல்லாம்வல்ல இறைவனருளாலே ஒருசிலர்க்கே அளிக்கப்படுவதாகும் என்பதனை இவர் அறிவர். ஆனால், பெண்மக்கள் இயற்கையாகவே இரக்க நெஞ்சினராதலால் அவர்கள் தாமெடுத்த பிறவியின் பயனாக அவரவர் நிலைமைக்கும் ஆற்றலுக்கும் ஏற்றவாறு ஏதாவது ஓர் அன்புப் பணி செய்தல் வேண்டுமென்றும், பணி செய்ய முடியாத அவ்வளவு கீழான நிலையில் ஆண்டவன் எவ்வொரு பெண்ணையும் படைக்கவில்லை என்றும் அம்மையார் கூறுகின்றார்.

இதுகாறும் உலகத்திற் பெரும்பணி செய்து அழியாப் புகழெய்திய மாதர்களெல்லாரும் எல்லாம்வல்ல ஆண்டவனை துணையாகக்கொண்டு தாந்தாம் கருதிய பணி

யினைச் செய்துமுடித்தனர். அத்தகைய அருண்மாதர்களுள் **எலிசபெத் அம்மையாரும்** ஒருவராவர்.

(9) [1]**ஜோன்** அம்மையார் தமது பதினன்காம ஆண்டில் இறைவனருளிய வானெலி (அசரீரி) கேட்டுப் பிரான்சு நாட்டிற்குப் படைத்தலைவியாகச் சென்று பணியாற்றினர். அதுபோன்று பிரை பெருமாட்டியார் தம் பதினேழாவதாண்டில் கடவுண்மொழி தம்மைத் தூண்டியதனலேயே தாம் உலகப் பணியில் ஈடுபட்டதாகத் தம் தமக்கையாரிடங் கூறியுள்ளார். எத்துணைக் கொடியவராயினும் கடவுணெறி ஒன்றினல்மட்டுமே அவர்களைச் சீர்திருத்த முடியும் என்பதை அம்மையார் தம் பழக்கத்தில் நன்கறிந்திருந்தனர். அதற்கு எடுத்துக்காட்டாக, முதன்முதல் நியூகேட் சிறைச்சாலைக்குச் சென்றிருந்தபோது காட்டு விலங்குகள் போற் பேரிரைச்சலிட்டுத் தம்மைச் சூழ்ந்த அம்முரட்டுத் தனமுள்ள சிறைமாதர்களை இவர் எவ்வாறு அமைதிப் படுத்தினர்? முதலிற் சிறிதுநேரம் அமைதியாயிருந்து ஆண்டவனை வேண்டிப் பின் தங் கையிற் கொணர்ந்த **விவிலிய நூலைத்** திறந்து அதிலுள்ள ஒரு சிறந்த கதையைத் தம் இனிய குரலிற் படித்துக் காட்டியதனலேயே. அதனைக் கேட்ட அச்சிறைப் பெண்கள் தங்கள் முரட்டுக் குணங்கள் நீங்கப்பெற்று உருகிய மனத்தினராய் அம்மையார் சொல்வழி கேட்கும் நிலையினராயினர். இவ்வொரு முறையிலேயே அவர்கள் அம்மையார் வழிப்பட்டனரென்றல், இன்னும் இவர் பலமுறை சென்று அங்கு அவர்கட்கு ஆண்டவனைப்பற்றியும் நல்லொழுக்க முறைகளைப்பற்றியுங் கூறிவந்தால் அவர்கள் சீர்திருந்தாமல் இருக்க முடியுமா? இதுபோல், இவர் சென்ற நாடு நகரங்களிலெல்லாம் சிறை

1. Joan of Arc

யாளர்களைப் பார்வையிடப்போனதும் முதலில் விவிலிய நூற்கதைகளையும் அறிவுரைகளையும் அவர்கட்குப் புகட்டியே கொடுஞ் செயன் மிக்க அம் முரட்டுக் குற்றவாளிகளை இவர் சீர்திருத்தி யுள்ளனர். இவ்வாறு கடவுணெறியின் வாயிலாக அவர்களைச் சீர்திருத்திய பிரை பெருமாட்டியாரது உளத்திறத்தின் பெருமையை என்னென்பேம்!

(10) ஒருவர் பல பிறவிகளிற் செய்து முடிக்கவேண்டிய பெரும்பணியை அம்மையார் தம் ஒரு பிறவியிலேயே செய்து முடித்தனர் என்பதை எவர்தாம் உணராதிருக்க முடியும்? அம்மையார் சென்ற இடங்களிலெல்லாம் பெருஞ் செல்வர்களாயினும், நாட்டாண்மைக்கார ராயினும், அரசியற் றலைவராயினும், முடியுடை அரசரேயாயினும் இவரைப் பெரிதும் மதித்து இவர் அறவுரைகளைக் கேட்டும், இவர் விரும்பிய சீர்திருத்தங்களுக்கு வேண்டுவன செய்தும்வந்தனர். மாதர்கள் வீட்டிற்கு வெளியே என்ன பொதுப்பணியைச் செய்ய முடியுமென்று இகழ்ந்து பேசிய அக்காலத்தில் **எலிசபெத் பிரை பெருமாட்டியார்** தாம்செய்த அரிய பணியினால் குன்றின்மேலிட்ட விளக்குப் போல் விளங்குவாராயினர்.



Shakti Press, Limited., (Shanti Press), Madras.